# குரலப்பர் மாறிவிட்டார்!

"சேட் கங்காராம் பெரிய மோசக்காரன் – ஊர் சொத்தை அடித்து உலையில் போட்டுக் கொள்கிறான் – கசக்கிப் பிழிந்து காசு திரட்டுகிறான் – நமது கரும்புக் கொல்லையில் தன் காளையை விட்டு மேயவைத்துப் பாழாக்குகிறான். நமது தோட்டத்து அரும்புகளை காலால் மிதித்து அழிக்கிறான். கனி குலுங்கும் தோட்டத்திலே கடுவனை ஏவுகிறான்... சேச்சே! அவனுடைய அக்கிரமத்துக்கு ஒரு அளவே இல்லை! அவனுடைய ஆதிக்கத்துக்கு ஒரு அளவே இல்லை! அவனுடைய ஆதிக்கத்துக்கு, அட்டகாசத்திற்கு நாம் ஆட்பட்டிருக்க வேண்டும். நம்மவர்களிடம், சேட் கங்காராமுடைய கெடுமதியை ஏற்படச் சொல்லி அவர்களுக்கு ரோஷமும், மானமும் ஏற்படச் செய்யவேண்டும். இதிலே காலதாமதமே கூடாது, காரியம் அடியோடு கெட்டு விடுவதற்குள் நாம் கடமையைச் செய்தாக வேண்டும்."

எனக்குக் களிப்பு சொல்லி முடியாது. ஏனெனில் சேட் கங்காராமின் கொட்டம் அடக்கப்பட வேண்டும் என்பதிலே எனக்கு ஏற்கனவே ஆர்வம் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்தது. என்னைப்போலவே எண்ணுவதுடன். என்னை விட மிகுதியாக ஆர்வம் காட்டி அனைவருக்கும் எழுச்சியூட்டும் முறையில் வீரம் பேசிட, கூவம் குரலப்பன் வந்தது களிப்பு கண்டதால், ஏற்படாமலிருக்குமா?

சேட் கங்காராமுக்கும் கூவம் குரலப்பனுக்கும் நேசமும் பாசமும் அதிகம் என்று எண்ணிக் கொண்டிருந்ததால் நம்முடன் கூடிப்பணியாற்ற குரலப்பன் வரமாட்டார் என்று நினைத்துக் கொண்டிருந்த நேரத்தில் இந்த ஆர்வமூட்டும் பேச்சு எழும்பியது; சுவையுள்ள பேச்சு, பயன் மிகுதியும் ஏற்படும் என்றுதான் நம்பினேன்.

'களத்தூரானும், கூவம் குரலப்பனும் ஒன்றுகூடிவிட்டார்கள். இனி ராட்டினம் ராஜப்பன் மட்டுந்தான் சேட் கங்காராமுக்குத் துணை' – என்று பலரும் பேசினர்.

சேட் கங்காராமின் கொட்டம் அடக்கப்பட வேண்டிய அவசர அவசியத்தை விளக்க, கூவம் குரலப்பனுடன் நான் கூட்டுப் பணியாற்றி வந்தேன். நாட்கள் உருண்டோடின. களத்தூரான் சொல்லுவதைத்தான் குரலப்பனும் சொல்லுகிறார் – இத்தனைக்கும் குரலப்பன், சேட் கங்காராமுடன் பலகாலம் பழகியவர்தான்! – இருவரும் சேர்ந்து இப்போது சேட் கங்காராமின் குட்டு உடைக்கிறார் என்று அனைவரும் பேசிக் கொண்டனர்.

நான் சேட் கங்காராமின் ஆதிக்கம் ஒழிய வேண்டும் என்று சொல்லுவேன். போதாது! நண்பர் களத்தூரான் சொல்லுவது போதாது – ஆதிக்கம் மட்டுமல்ல, சேட் கங்காராமே இங்கிருந்து ஒழியவேண்டும் என்று குரலப்பர் முழக்கமிடுவார். எனக்கு ஒரே குதூகலம்.

சேட் கங்காராம்கூடக் கலங்கிப் போனார் என்று கேள்வி.

இந்த களத்தூரான்தான். ரொம்ப நாளாக என்னை எதிர்த்துப் பேசுகிறான் – என்னிடம் சிரித்துப் பேசி வந்தான் குரலப்பன். இந்த ஆசாமியுமல்லவா களத்தூரானுடன் கூடிக் கொண்டான். போறாத வேளை! முணுமுணுத்துக் கொண்டானாம் சேட்.

சேட் கங்காராமை மட்டுமல்ல, என்னுடன் கூடிக் கொண்டு குரலப்பர், கோயிலூரான் கொடுமை – மடத்தூராரின் மடமை இவைகளை எல்லாம் கண்டித்துப் பேசுவார்.

இங்ஙனம் இருந்துவந்த குரலப்பர், திடீரென்று ஒருநாள் சேட் கங்காராமை கண்டித்துப் பேசுவது வீண் அனாவசியமாகக் குரோதம் மூட்டும் காரியமாகும். சேட் கங்காராம் அக்கிரமம் செய்கிறார் என்று கதைக்கும் களத்தூரான் கோவையான், கோங்கூரான், கொல்லத்தான் ஆகியோரின் 'குரலாம்' – ஆமாம்! குப்புறப்படுத்தும் கூறுவேன்' என்று பேச ஆரம்பித்தார். நான் திகைத்துப் போனேன்.

குரலப்பரின் இந்த மன மாறுதலுக்கு காரணம் புரியவில்லை.

சேட் கங்காராமின் சேட்டைகள் அப்படியே இருந்தன. சொல்லப் போனால், வளர்ந்து வந்தன. எனினும் குரலப்பரின் பேச்சும் அடியோடு மாறிவிட்டது.

கோயிலூராரர் மீது கோபித்துக் கொண்டு இந்தக் களத்தூர்க் கும்பல் காட்டூர் செல்கிறார்கள் என்றார்.

மடத்தூரானிடம் மல்லுக்கு நிற்கும் இந்த மாபாவிகள் வேற்றூரானிடம் சேர்ந்து கொண்டார்கள் என்றார். எனக்கு என்ன காரணம் இந்த மாறுதலுக்கு என்பதே புரியவில்லை திகைத்துப் போனேன்.

களத்தூரானும் குரலப்பனும் பிரிந்துவிட்டார்கள் என்று முப்புரியானும், சேட்டும், பேசிக் கேலி செய்தனர். . . கை கொட்டி சிரித்தார்.

சில நாள் திகைப்பு இருந்தது – பிறகு சரி, இடையே கிடைத்த உதவி, இம்மட்டும்தான் நிலைத்தது. இனி நமது வேலையைத் தொடர்ந்து நாம் செய்ய வேண்டியதுதான் என்று உறுதி கொண்டேன் – பணியில் ஈடுபட்டு வரலானேன்.

சேட் கங்காராமை எதிர்த்து ஒழிக்க வேண்டும் என்று முழக்கமிட்டு வந்த குரலப்பன். மாறிவிட்டதற்கான காரணம் மெள்ள மெள்ளத்தான் தெரிந்தது.

சேட் கங்காராமை பலரும் எதிர்க்கிறார்கள் – பத்தோடு பதினொன்றாக இருந்து கொண்டு நாமும் எதிர்த்தால் நாம் வெளியே தெரிவது எப்படி! ஆகவே, சேட்டுடன் கூடிக் கொள்வோம் – அப்போது பலருடைய பார்வையிலும் பளிச்செனப் படலாம் என்பது ஒரு காரணம்!

மற்றொன்று சேட் கங்காராம் தன்னுடைய கொல்லைக் காவல் வேலைக்குக் குரலப்பரையே நியமித்து விட்டார்.

கொல்லைக் காவல் வேலை என்பது வெளியே தெரியாம விருக்க வேண்டும் என்பதற்காக குரலப்பர் ''எல்லைக் காவல்'' என் வேலை என்று சொல்லிக்கொண்டு வருகிறார்.

எல்லை எதுவானாலும் எனக்கென்ன, என் கொல்லைக்கு குரலப்பர் காவல் இருக்கிறார் – தொல்லை விட்டது என்று சேட் கங்காராம் நம்பிக் கொண்டிருக்கிறார் – காவல் கடும்புயலாவது தெரியாமல்.

குறிப்பு – குறும்பென்றும் தெரியவில்லை, புத்தி கூர்மை யென்றும் தெரியவில்லை. ஆபீஸ் சிறுவன் இதையும் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று கூறுகிறான்.

"முதலாளித்துவத்தின் சுரண்டற் கருவிகளான பாங்குகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள், கப்பல் தொழில், ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவைகளில்கூட வடநாட்டு மூலதனம் முற்றுகை யிட்டுள்ளது. தமிழகத்தின் பெரிய பெரிய தொழில்கள், வாணிகம் ஆகியவற்றில் மட்டுமின்றி சினிமா, சிற்றுண்டி சாலை, நகைக்கடை, கடிகாரக்கடை, செருப்புக்கடை, உடைக்கடை, போன்ற சின்னச் சின்ன வாணிப நிலையங்களைக் கூட வடநாட்டார் நடத்தி வருகின்றனர். தமிழன் என்ற உணர்ச்சியோடு, சென்னை 'சீன' பசாரில் ஒரு முறை சுற்றிப் பார்த்தால், இந்த உண்மை விளங்கும்; அப்போது ஆத்திரத்தால் நமது செந்நீர் கொதிக்கும்; துக்கத்தால் கண்ணீர் பெருகும் இதனால்தான் நாம் வடநாட்டு ஆதிக்கம் ஒழியவேண்டும் என்கிறோம்'' தமிழ் முரசு.

இதற்கும் நான் எழுதியதற்கும் என்னடா சம்பந்தம் பயலே! என்று நான் கேட்கிறேன்.

வேளைக்கு ஒரு விதமாக மாறிவிடுபவர்களைப் பற்றி வேடிக்கை கதை எழுதினீர்களே! இதோ நிஜமாகவே ஒரு சம்பவம். ம.பொ.சி.யின் முன்னாள் கருத்து அவருடைய முரசு இதழில் இருப்பது. இன்று அவருடைய கருத்துதான் தெரியுமே நமக்கு, ஆகவேதான் இதைக் கொடுத்தேன் என்கிறான்.

**14-1-56**

❄ ❄ ❄ ❄ ❄